தைரியப்படுத்தவேண்டியது அவசியம்'' என்றான். ஜாம்பவானும் அப்படியே செய்ய, வானர ஸைன்யங்கள் அவருடையவார்த்தையை நம்பி விபீஷணனையும் கவனித்துப் பார்த்துப் பயந்தெளிந்து திரும்பி வந்தன. விபீஷணன் ராமலக்ஷ்மணர்களுடைய உடம்பெங்கும் பாணங்களால் துளைக்கப்பட்டிருப்பதைக் கண்டு, மனம் பதை பதைத்து, ஜலத்தைத் தொட்டு அவர்களுடைய கண்களைத் துடைத்து, துக்கத்தை அடக்கமுடியாமல் அழுது பிரலாபித்தான்.

"மஹாபலவான்களும் பராக்கிரமசாலிகளும் யுத்தத்தில் பிரியமுள்ளவர்களுமான இந்தப் புருஷச்சிரேஷ்டர்கள் கபட யுத்தம் செய்யும் ராக்ஷஸர்களால் இந்த கதியடைந்தார்களே. என்னுடன் பிறந்தவன் மஹாகுரூரன். அவனுக்குப் பிறந்த புத்திரன் அவனைவிட துஷ்டன். அந்த மஹா பாபி ராக்ஷஸர்களுக்குரிய அற்ப புத்தியாலும் மாயையாலும் இவர்களை மோசம் செய்து விட்டானே. இதனால், தன்னைப் பெற்றவனுக்கு அழியாத அபகீர்த்தியை ஸம்பாதித்தான். இந்த ராஜபுத்திரர்களோ கபடமறியாதவர்கள்; பாணங்களால் துளைக்கப்பட்டு ரத்தத்தால் நனைந்து முள்ளம்பன்றிகளைப்போல் பூமியில் கிடப்பதைக் காணவும் எனக்கு விதியோ? இவர்களுடைய வீர்யத்தை அண்டி நான் க்ஷேமமடையலாமென்றிருந்தேனே. அந்தப் புருஷசிரேஷ்டர்கள் பூமியில் விழுந்து மரணமடையப் போகிறார்களே. இவர்களைப் பறிகொடுத்து நான் மாத்திரம் உயிருடன் இருக்கிறேன். என் எண்ணங்களெல்லாம் வீணாய் ராஜ்யத்தையும் இழந்து பரிதவிக்கிறேன். என் சத்துருவான ராவணன் தன் பிரதிக்ஞையை நிறைவேற்றி ஸந்தோஷப்படுகிறான்'' என்று பிரலாபிக்கும் அந்தப் பக்த சிரோமணியை ஸுக்ரீவன் பிரியத்துடன் ஆலிங்கனம் செய்து "தர்மாத்மாவே! லங்கா ராஜ்யம் உனக்குக் கிடைப்பதில் ஸந்தேகமுமுண்டோ? ராவணன் புத்திரபந்துக்களுடன் க்ஷேமமாய் வாழ்வானென்ற நம்பிக்கை வேண்டாம். நமது ரக்ஷகர்களுக்கு இந்த நாகபாசங்கள் யாதொரு கெடுதியையும் செய்ய முடியாது. சற்று நேரம் மயங்கியிருப்பார்களேயொழிய வேறல்ல. இதோ அதிசீக்கிரத்தில் பிரக்ஞை தெளிந்து ராவணனையும் ஸகல ராக்ஷஸர்களையும் நாசம் செய்வார்கள்'' என்று ஸமாதானம் செய்தான். பிறகு சமீபத்திலிருந்த தன் மாமனான ஸுஷேணனை நோக்கி, "நீ ராமலக்ஷ்மணர்களை எடுத்துக்கொண்டு வானர ஸைன்யங்களுடன் கிஷ்கிந்தைக்குப் போ. நான் ராவணனையும்

அவனுடைய புத்திரமித்திர பந்துக்களையும் நாசம் செய்து முன்பு இந்திரன் தன்னை விட்டுப் பிரிந்த லக்ஷ்மியைத் திரும்பி அடைந்தது போல், ஜானகியை ராமனிடத்தில் கொண்டு வந்து சேர்க்கிறேன்" என்றான். அதைக் கேட்டு ஸுஷேணன், "தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் நடந்த கோர யுத்தத்தை நான் பார்த்திருக்கிறேன். அப்பொழுது பாணப்பிரயோகத்தில் ஒப்பற்ற திறமையுடைய தானவர்கள் அபூர்வமான பாணங்களாலும் அஸ்திரங்களாலும் தேவர்களை அடிக்கடி மறைத்தார்கள். சில தேவர்கள் உபத்திரவம் தாங்காமல் துடித்தார்கள்; சிலர் பிரக்ஞையற்றார்கள்; சிலர் உயிரிழந்தார்கள். அப்பொழுது மிருதஸஞ்ஜீவினி முதலிய வித்யைகளாலும் மந்திரங்களாலும் ஔஷதிகளாலும் பிருஹஸ்பதி அவர்களை அபாயத்திலிருந்து தப்புவித்தார். ஸம்பாதி பனஸன் முதலிய வானரர்களுக்கு அவைகளும் அவை வளரும் பர்வதமும் நன்றாய்த் தெரியும். க்ஷீரஸமுத்திரத்தில் முன்பு அமிருதத்தைக் கடைந்தெடுத்தவிடத்தில் சந்திரகிரி துரோணகிரி யென்ற மலைகளில் தேவர்களால் வைத்து வளர்க்கப் படுகின்றன. அந்த ஸஞ்ஜீவிகரணி விசல்யகரணியென்ற ஒஷதிகளைக் கொண்டு வருவதற்கு வானரர்களைச் சீக்கிரமாய் அனுப்ப வேண்டியது. இதோவிருக்கும் வாயுபுத்திரன் போய்வரட்டும்" என்றான்.

அதற்குள் மேகங்கள் மின்னற்கொடிகளுடன் கர்ஜித்தன. அவைகளையும் ஸமுத்திர ஜலத்தையும் அடித்துத் தள்ளிக்கொண்டு சண்டமாருதம் வீசிற்று. பூமி நடுங்கிற்று. மஹாவிருக்ஷங்கள் வேருடன் ஸமுத்திரத்தில் விழுந்தன. பெரிய தேகங்களுடன் லங்கையில் வஸிக்கும் ஸர்பங்களும் ஸகல ஜல ஜந்துக்களும் பயந்து நடுங்கி நீரில் மறைந்தன. கொஞ்ச நேரங்கழித்துக் கருடபகவான் வானரர்களுக்கு பிரத்யக்ஷமானார். அளவற்ற பலவானான அந்த வினதையின் புத்திரன் அக்னியைப்போல் ஜ்வலித்துக்கொண்டு வருவதைக் கண்டு பாண ரூபமாய் ராமலக்ஷ்மணர்களைக் கட்டியிருந்த நாகங்கள் இருந்தவிடந் தெரியாமல் மறைந்தன. பெரிய திருவடியும் (கருடபகவானும்) மஹாபலவான்களான அந்தப் புருஷ சிரேஷ்டர்களைப் பார்த்துப் பூரண சந்திரனைப்போன்ற அவர்களுடைய முகங்களைக் கைகளினால் தடவினார். உடனே அவர்களுடைய தேகங்களிலிருந்த காயங்களெல்லாம் மறைந்து அவர்கள் உருக்கியோடவிட்ட தங்கத்தைப்போன்ற சரீர காந்தியுடன் பிரகாசித்தார்கள். பிறகு ஐயிக்கும் சௌர்ய்த்தையும் பிறர் செய்

யும் அவமானத்தைப் பொருக்காமையும் பராக்கிரமும் தேகபலமும் காந்தியும் லோகோத்தரமான காரியங்களில் ஸ்திரமான பிரயத்னம் செய்யும் உறுதியும் ஸூக்ஷ்மமான விஷயங்களை அறியும் ஞானமும் விவேகமும் ஞாபக சக்தியும் முன்னைவிட இரு மடங்காயின. இந்திரனையும் உபேந்திரனையும்போன்ற அந்த ராஜபுத்திரர்களைக் கருடன் வாரி யெடுத்து மஹாப்பிரீதியுடன் ஆலிங்கனம் செய்தார்.

பிறகு, ராமன் அந்தப் பக்ஷிராஜனை நோக்கி, "இந்திரஜித்தால் எங்களுக்கு நேர்ந்த பெரிய ஆபத்திலிருந்து தங்களுடைய கிருபை யால் நாங்கள் தப்பி முன்போல் பலத்தையும் வீரியத்தையும் உத்ஸாஹத்தையும் அடைந்தோம். என் பிதாவான தசரதனையும் என் பாட்டனை அஜமஹாராஜனையும் கண்டதுபோல் தங்களைப் பார்த்து என் மனது ஸந்தோஷிக்கிறது. அற்புதமான ரூபத்துடன் தெய்வலோகத்துக் கந்தம், புஷ்பம், மாலை, வஸ்திரம், ஆபரணம் முதலியவைகளுடன் விளங்கும் தாங்கள் யார்?" என்று கேட்டார். கருடன் ஆனந்தம் மேலிட்டுக் கண்களில் நீர் கரை புரள, "ரகுவீர! நான் உனக்கு வெகுப் பிரியமான தோழன். உன் பிராணனே ரூபமெடுத்து வெளியில் ஸஞ்சரிப்பதுபோலிருப்பவனென்று நம்பு. கருடனென்று எனக்குப் பெயர். உங்களுக்கு ஒத்தாசைசெய்வதற் காக இங்கே வந்தேன். மஹாவீரர்களான அஸுரர்களும் மஹா பலவான்களான தானவர்களும் தேவர்களால் ரக்ஷிக்கப்பட்ட இந்திரனும், மஹாகுரூரனை இந்திரஜித்து தன் மாயாபலத்தால் ஸிருஷ்டித்த இந்தக் கோரமான நாகபாசத்திலிருந்து உங்களைத் தப்புவிக்கமுடியாது. இந்த ஸர்பங்கள் சத்துருவின் வம்சத்தைச் சேர்ந்தவை. கூர்மையான பற்களையும் கொடிய விஷத்தையு முடையவை. ராவண புத்திரனுடைய மாயாபலத்தால் ஸர்ப ரூபந்தரித்து உங்களை உபத்திரவித்தன. தர்மங்களையறிந்தவனே! வீணாகாத பராக்கிரமத்தையுடையவனே! நீயும் சத்துருகு காலனை லக்ஷ்மணனும் பாக்கியசாலிகள். உங்களுக்கு நேர்ந்த அபாயத்தைக் கேள்விப்பட்டு எனக்கு உங்களிடத்திலுள்ள ஸ்நேஹத்தாலும், தோழனுடைய கடமையாலும் அதிவேகமாய் வந்துசேர்ந்தேன். மஹாகோரமான இந்த அஸ்திரபந்தத்திலிருந்து விடுபட்டீர்கள். எப்பொழுதும் அதிக ஜாக்கிரதையாயிருக்க வேண்டியது. யுத்தத்தில் கபடத்தையும் மாயையையும் உபயோ கிப்பது ராக்ஷஸர்களுக்கு ஸஹஜம், குலதர்மம். சுத்தமான ஆசாரத்தையுடைய உங்களைப்போன்ற வீரர்களுக்கு நியாயமா

நடப்பதே பலம். யுத்தத்தில் ராக்ஷஸர்களை ஒருபொழுதும் நம்பக் கூடாது. இப்பொழுது நேர்ந்த விஷயத்தைக்கொண்டே ராக்ஷஸர்கள் எப்பொழுதும் கபடமுள்ளவர்களென்று அறியுங்கள்" என்று கருடபகவான் ராமனை இறுகத் தழுவி, "மித்ர ! ரகுநாத ! தர்மமூர்த்தி ! சத்துருக்களிடத்திலும் பரமவாத்ஸல்யத்தைப் பாராட்டும் கருணாஸமுத்ர! நான்போய்வருகிறேன். உத்தரவுகொடு. நான் உனக்கு எப்படித் தோழனென்றதைப்பற்றி இப்பொழுது கேட்க வேண்டாம். யுத்தத்தில் ஸகல சத்துருக்களையும் நாசம் செய்த பிறகு உனக்கே தெரியும். உன் பாணாக்னியால் லங்கையில் குழந்தைகளும், கிழவர்களும் மாத்திரம் வஸிக்கும்படி செய்து மற்ற ராக்ஷஸர்களை வேரறுத்து ராவணனை வதம்செய்து ஜானகியை அடைவாய்" என்றார். இப்படி அந்தப் பக்ஷீந்த்ரன் ராம லக்ஷ்மணர்களுக்கு நேர்ந்த அபாயத்தைத் தீர்த்து அவர்களைப் பிரதக்ஷிணம் செய்து, பிரியத்துடன் கட்டியணைத்து ஆகாசமார்க்கமாய் வாயுபகவானைப்போல் அதிவேகமாய்ச் சென்றார். வானரத் தலைவர்கள் தெய்வானுக்ரஹத்தால் ரகுவீரர்களுக்கு நேர்ந்த அபாயம் நீங்கினதைக் கண்டு ஸந்தோஷந்தாங்காமல் சிம்மநாதம் செய்து வால்களைச் சுழற்றினார்கள். பேரி மிருதங்கம் சங்கம் முதலிய மங்கள வாத்தியங்களை வாசித்தார்கள். கர்ஜித்தார்கள் ; தோள் தட்டினார்கள் ; தாவினார்கள். மஹாவிருக்ஷங்களையும் பர்வதங்களையும் பெயர்த்தெடுத்துக்கொண்டு யுத்தத்திற்குத் தயாராய் நின்றார்கள். லங்கையின் கோட்டைவாசல்களைத் தாக்கி அட்டகாஸம் செய்தார்கள். கோடை காலத்தின் முடிவில் மேகங்கள் ராத்திரியில் பயங்கரமாய்க் கர்ஜிப்பதுபோல் வானரத் தலைவர்கள் சத்துருக்களின் ஹிருதயம் பிளக்கும்படியாய்க் கர்ஜித்து அவர்களை யுத்தத்திற்கு அழைத்தார்கள்.

ததஸ்து பீமஸ்துமுலோ நிநாதோ
பபூவ சாகாம்ருக யூதபானாம் |
க்ஷயே நிதாகஸ்ய யதா கனானாம்
நாதஸ்ஸுபீமோ நததாம் நிசீதே ‖ (66)

ராகு தசை

# குரு புக்தி

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

## கிஷ்கிந்தா காண்டம் — 26-வது ஸர்க்கம்

## ஸுக்ரீவ பட்டாபிஷேகம்

தத : சோகாபிஸந்தப்தம் ஸுக்ரீவம் க்லின்னவாஸஸம்
சாகாம்ருக மஹாமாத்யா : பரிவார்யோப தஸ்த்திரே (1)

நனைந்த வஸ்திரத்துடன் சோகத்தால் வாடி நிற்கும் ஸுக்ரீவனை வானர மந்திரிகளும் பிரதானிகளும் சூழ்ந்து நின்றார்கள். பிறகு அவர்களெல்லோரும் மஹா பராக்கிரமசாலியும் ஸகல பிராணிகளுக்கும் மங்களங்களைச் செய்கிறவருமான ராமனிடத்தில் வந்து, மஹரிஷிகள் பிரம்மாவை நமஸ்கரிப்பதுபோல், கைகூப்பி வணக்கமாய் வந்தனம் செய்தார்கள். அப்பொழுது பால சூரியனைப்போன்ற முகத்தையும் தங்கமலையைப்போன்ற தேக காந்தியையுமுடைய ஹனுமான் ராமனைப் பார்த்து, "ஸ்வாமி! தங்களுடைய அனுக்கிரஹத்தால் ஸுக்ரீவன் தன் முன்னோர்களுடைய ராஜ்யத்தை அடைந்தார். தாங்கள் உத்தரவு செய்தால் இவர் கிஷ்கிந்தையில் பிரவேசித்து மித்திரர்களுடன் மேலே நடக்க வேண்டிய காரியங்களைச் செய்வார். மங்கள ஸ்நானம் செய்து, நானு கந்தங்களாலும் ஔஷதங்களாலும் ரத்தினங்களாலும் விதிப்படி தங்களைப் பூஜிப்பார். தாங்கள் இங்கிருந்து ரம்மியமான கிஷ்கிந்தைக்கு எழுந்தருளி, அவரை வானரர்களுக்கு அரசனுகச் செய்து அவர்களை ஸந்தோஷப்படுத்த வேண்டும்" என்றார்.

அந்த விக்ஞாபனத்தைக் கேட்டு, மஹா புத்திமானுன ராகவன், "குழந்தாய், நான் பிதிருவாக்கிய பரிபாலனம் செய்வதற்காகப் பதினுன்கு வருஷங்கள் வரையில் வனத்தில் வஸிக்கவேண்டியது. கிராமத்திலாவது நகரத்திலாவது பிரவேசிக்கக்கூடாது. ஸுக்ரீவன்

கிஷ்கிந்தைக்குச் சென்று அபிஷேக மஹோத்ஸவத்தை அனுபவிக்கட்டும்'' என்று ஆக்ஞாபித்தார்.

பிறகு ஸகல ஆசாரங்களையும் அறிந்த ரகுவீரன், உதாரபுத்தி பலம் பராக்கிரமம் சீலம் முதலிய உத்தம குணங்களால் விளங்கும் சுக்ரீவனைப் பார்த்து, மித்திரனே! அங்கதன் உன் தமயனுடைய புத்திரன்; உத்தம குணசாலி; பராக்கிரமத்தில் உனக்கு ஸமமானவன்; யுவராஜாவாக இருக்கத் தகுந்தவன். ஆகையால் அவனுக்கு யௌவராஜ்யாபிஷேகம் செய்விக்க வேண்டியது. வர்ஷருதுவிற்கு முந்தின ஆஷாட மாதம் இப்பொழுது நடக்கிறது. இது முதல் நான்கு மாதங்கள் வரையில் மழையின் உபத்திரவத்தால் ஸீதையைத் தேடி ராவணனுடன் யுத்தம் செய்வதற்கு ஸௌகர்யப்படாது. ஆகையால் நீ அதுவரையில் கிஷ்கிந்தையிலிரு. நானும் லக்ஷ்மணனும் இந்த மலைக் குகையில் வஸிக்கிறோம். இது அழகாகவும் விசாலமாகவும் போதுமான காற்றுள்ளதாகவும் ஜலஸௌக்யமுள்ளதாகவும் நேர்த்தியான புஷ்பங்களால் சூழப்பட்டதாகவுமிருக்கிறது. கார்த்திகை மாதம் பிறந்தவுடன் உன் ஸைன்யங்களைச் சேர்த்து ஸீதையைத் தேட முயற்சி செய். நாமிருவரும் இப்படி ஏற்பாடு செய்து கொள்வோம். நீயும் கிஷ்கிந்தைக்குப் போய் அபிஷேகம் செய்துகொண்டு, உன் நண்பர்களுக்கு ஸந்தோஷத்தையும் க்ஷேமத்தையும் அருளக் கடவாய்'' என்றார்.

ஸுக்ரீவனும் அவருடைய ஆக்ஞையைத் தலையால் தாங்கிக் கிஷ்கிந்தைக்குப் போக, அங்குள்ள வானரர்கள் அவனைக் கைகூப்பி நமஸ்கரித்து உபசரித்தார்கள். மந்திரிகளும் பிரதானிகளும் அடிபணிந்து பாதங்களைத் தொட்டுக் கைகட்டி வாய் பொத்தி அவனுடைய ஆக்ஞையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஸுக்ரீவன் அவர்களை எழுந்திருக்கச் சொல்லி, பிரியமாகப் பேசித் தகுந்தபடி மரியாதைசெய்து, வாலியின் அந்தப்புரத்தில் புகுந்தான், அங்கே தாரை முதலிய ஸ்த்ரீகளைப் பல வகையாக ஸமாதானம் செய்துத் தன் வசப்படுத்திக்கொண்டு வெளியில் வந்தான். பிறகு தேவதைகள் இந்திரனுக்குத் தேவராஜ்ய பட்டாபிஷேகம் செய்து வைப்பதுபோல் ஸுக்ரீவனுடைய நண்பர்கள் அவனுக்கு அபிஷேகம் செய்வித்தார்கள். தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட வெள்ளைக் குடையை அவனுக்குமேல் பிடித்துத், தங்கப்பிடிகளுள்ள வெண்சாமரங்களை இருபுரத்திலும் விசிறினர்கள். பிறகு பலவகை ரத்தினங்கள் விதைகள் ஔஷதிகள், பாலுள்ள மரங்களின் முளை

கள். மலர்கள் வெள்ளை வஸ்திரங்கள், கற்பூரம், வாசனையுள்ள மாலைகள், நிலத்தாமரை, நேர்த்தியான சந்தனங்கள், அகில் முதலியவாஸனைத்திரவியங்கள், மஞ்சள்கலந்த அக்ஷதை, ஸ்வர்ணம், யவமென்ற தான்யம், தேன், நெய், தயிர், புலித்தோல், பன்றித் தோலால் செய்யப்பட்ட பாதரக்ஷைகள், பூச்சுகள், கோரோசனை, மனச்சிலை முதலிய பதார்த்தங்களைக் கொண்டு வந்தார்கள். உத்தமமான பதினாறு கன்னிகைகளும் சித்தமாயிருந்தார்கள். பிறகு, பிராம்மணர்களுக்கு ரத்தினங்கள் வஸ்திரங்கள் பக்ஷ்யங்கள் இவைகளைக் கொடுத்துத் திருப்தி செய்தார்கள். தர்ப்பைகளைப் பரப்பி அக்னிகளைப் வளர்த்து விதிப்படி அதில் ஹோமம் செய்தார் கள். அரண்மனையின் மேல்மாடியில் விசித்திரமான மாலைகளால் அலங்கரித்து, தங்கத்தால் கால்களுள்ள சிம்மாஸனத்தைக் கிழக்கு முகமாக விதிப்படி மந்திரங்களைச் சொல்லி அமைத்து, உத்தமமான விரிப்புகளால் அலங்கரித்தார்கள். புண்ய நதிகள், புண்யதீர்த்தங் கள் ஸமுத்திரங்கள், இவைகளிலிருந்து ஜலத்தை எடுத்துக்கொண்டு வந்து தங்கக் குடங்களில் வைத்து, கஜன், கவாக்ஷகன், கவயன், சரபன், கந்தமாதனன், மைந்தன், த்விவிதன், ஹனுமான், ஜாம்ப வான், நளன் முதலிய வானர சிரேஷ்டர்கள் போதாயனர் முதலிய மஹரிஷிகள் ஏற்படுத்தின ராஜ்யாபிஷேகத்துக் கல்பத்தின்படி, லக்ஷணங்கள் பொருந்தின மாட்டுக் கொம்புகளாலும் தங்கப் பாத் திரங்களாலும் ஸுக்ரீவனை அபிஷேகம் செய்தார்கள். தேவேந் திரனைத் தேவ கணங்கள் பட்டாபிஷேகம் செய்வதுபோல் சிறப்பாக உத்ஸவம்கொண்டாடி, வானரர்கள் அனைவரும் ஆனந்தத்தால் ஆரவாரம் செய்தார்கள். அதைப் பார்த்து ஸகல வானரர்களும் அங்கதனிடத்தில் இரக்கங்கொண்டு ஸுக்ரீவனை மிகவும் கொண்டாடி உபசரித்து, மஹாத்மாவான ராமனையும் லக்ஷ்மணனையும் அடிக்கடி புகழ்ந்தார்கள். கிஷ்கிந்தை எங்கும் கொடிகளாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு ஸந்தோ ஷத்தால் பரவசமடைந்த வானரர்களால் நிறைந்து, விளங் கிற்று. அபிஷேக மஹோத்ஸவம் நடந்த விதத்தை ராமனுக்குத் தெரிவித்து, தேவேந்திரனைப்போல், தான் இழந்த ராஜ்யத் தையும் ருமை என்ற பார்யையையும் மறுபடியும் அடைந்தான்.

நிவேத்ய ராமாய ததா மஹாத்மனே
மஹாபிஷேகம் கபிவாஹினீபதி : |
ருமாம் ச பார்யாம் ப்ரதிலப்ய வீர்யவான்
அவாப ராஜ்யம் த்ரிதசாதிபோ யதா ||

(42)

# சனி புக்தி

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

## ஸுந்தர காண்டம் — 47–வது ஸர்க்கம்

## அக்ஷகுமாரனுடைய வதம்

ஸேனுபதீன் பஞ்ச ஸ து ப்ரமாபிதான்
ஹனூமதா ஸானுசரான் ஸவாஹனன் |
ஸமீக்ஷ்ய ராஜா ஸமரோத்ததோன்முகம்
குமார மக்ஷம் ப்ரஸமைக்ஷதாக்ரத : || (1)

இப்படி ஒரு வானரனுல் பஞ்சஸேனுதிபதிகளும் ஸைன்யமும் நாசமடைந்ததைக் கேட்டு, ராவணன் தன்னைச் சூழ்ந்திருப்பவர்களில் யாரை அனுப்பலாமென்று பார்க்கையில், தன் குமாரனுன அக்ஷன் மாருதியோடு யுத்தம்செய்து அவரைப் பிடித்துவர ஆவல் கொண்டவனுய் முகத்தைத் தூக்கினுன். அதைக் கண்டு ராவணனும் கண் ஜாடையால், " போய் வா " என்று அவனை உத்திரவு செய்ய, அவன் ஸபையிலிருந்து வெளியில் சென்றுன். அவன் ப்ரதாபசாலி. பிராம்மண சிரேஷ்டர்களால் ஹோமம்செய்து வளர்க்கப்பட்ட அக்னியைப்போல் ஜ்வலித்துக்கொண்டு, ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட வேலாயுதத்தைக் கையிலேந்தி யுத்தத்திற்குப் புறப்பட்டான். உருக்கிவிட்ட தங்கத்தால் செய்யப்பட்டு, பாலசூரியனைப்போல் பிரகாசிக்கும் பெரிய ரதத்திலேறி, ஆஞ்ஜநேயரிருக்குமிடத்திற்குச் சென்றுன். தேவதைகளுக்கு ஸமமான பராக்கிரமத்தையுடைய அந்த அக்ஷகுமாரனுடைய ரதம் கடுந்தவத்தால் சம்பாதிக்கப்பட்டது. உருக்கின தங்கத்தால் செய்யப்பட்ட ஜன்னல்களையுடையது. ரத்தினத்தால் அலங்கரிக்கப்பட்ட கொடிகளாலும் த்வஜங்களாலும் அழகு பொருந்தினது.

மனோவேகமுள்ள எட்டுக் குதிரைகள் பூட்டினது. தேவர்களாலும் அசுரர்களாலும் தடுக்க முடியாதது. யாதொரு சகாயமுமில்லாமல் செல்லக்கூடியது. சூரியனைப்போன்ற காந்தியையுடையது. ஆகா சத்தில் தடையில்லாமல் ஸஞ்சரிக்கக்கூடியது. அதில் அம்பறா களும் எட்டுக் கத்திகளும் சக்தி தோமரம் முதலிய ஆயுதங்களும் வரிசையாய்க் கட்டப்பட்டிருந்தன. இப்படி யுத்தத்திற்கு வேண்டிய ஸகல பதார்த்தங்களாலும் நிறைந்து, சூரியனைப்போலும் சந்தி ரனைப்போலும் மஞ்சள் நிறமும் வெண்மையுள்ள கடிவாளங்களை யுடைய அந்தத் திவ்ய ரதம் ஆகாசத்தில் சூரியன் உதித்ததுபோல் ஸித்தமாய் நிற்கக் கண்டு, அக்ஷகுமாரன் அதிலேறி யுத்தபூமிக்கு வந்தான். இப்படிக் குதிரை, யானை, ரதம், காலாட்கள் இவைக ளுடைய சப்தத்தால் ஆகாசமும், அதிலுள்ள பர்வதங்களும் நடு நடுங்க, யுத்தகளத்தில் இன்னும் யார் வருகிறுனென்று எதிர் பார்த்துக்கொண்டிருக்கும் ஹனுமானுடைய ஸமீபத்தில் வந்தான்.

பிறகு, சிம்மத்தைப்போல் நேத்திரங்களையுடைய அந்த ராக்ஷ ஸன், ஸகல பதார்த்தங்களையும் நாசஞ்செய்யும் காலாக்னியைப் போல் ஜ்வலிக்கின்ற அந்த வாயுபுத்திரனைக் கண்டு, "என்ன ஆச் சரியம்! இந்த ஒரு குரங்கு பயமில்லாமல் நமது நகரத்தில் பிரவே சித்து இவ்வளவு ஸைன்யங்களையும் விளையாட்டாய்க் கொன்று என்ன அலக்ஷியமாய் உட்கார்ந்திருக்கிறது" என்று பரபரப்புடன் மாருதியிடத்தில் மதிப்பு வைத்து அவரை உற்றுப் பார்த்தான். மஹா பலவானும் புத்திசாலியுமாகையால் அக்ஷகுமாரன் ஹனுமா னுடைய தேகத்தையும், பலத்தையும், பராக்கிரமத்தையும் அவ ருடைய செய்கைகளால் ஊகித்துத் தன் பலபராக்கிரமத்தையும் ஒப்பிட்டு, இவனை ஜயிப்போமென்று நிச்சயங்கொண்டு, பனி நீங்கினவுடன் உதிக்கும் சூரியனைப்போல் உக்ரமான தேஜஸால் விருத்தியடைந்தான். பிறகு, அவருடன் யுத்தஞ்செய்ய நிச்ச யித்து, அவர் பிறரால் தடுக்க முடியாத பராக்கிரமசாலியென்று கண்டு, கோப பரவசனுய் நேர்த்தியாக யுத்தம் செய்ய ஏற்பாடு செய்துகொண்டு, ஆஞ்சநேயரை மூன்று கூர்மையான பாணங் களால் அடித்தான். அவர் கொஞ்சங்கூட சிரமமில்லாமல் யுத்தம் செய்துகொண்டு, சத்துருக்களை ஜயிப்போமென்ற நிச்சயத்தால் கர்வமடைந்திருப்பதைக் கண்டு, "இன்றைக்கு எனக்கு ஸரியான யுத்தவீரன் கிடைத்தான்" என்று ஸந்தோஷப்பட்டு, வில்லையும் பாணங்களையும் எடுத்துக்கொண்டு, எல்லா ஆபரணங்களாலும்

அலங்கரிக்கப்பட்ட பராக்கிரமசாலியான அக்ஷகுமாரன் அதிசீக்கிரமாக மாருதிக்கு ஸமீபத்தில் மறுபடியும் வந்தான்.

பிறகு, தேவர்களும் அசுரர்களும் பயத்தால் நடுங்கும்படி அவ்விருவருக்கும் யுத்தம் நேர்ந்தது ; அதற்கு உபமானம் சொல்ல முடியாது. பூமி நடுங்கிற்று ; சூரியன் பயந்து மறைந்தான் ; காற்றடிக்கவில்லை ; மலைகள் அசைந்தன ; ஆகாசத்தில் பெரும் சப்தமுண்டாயிற்று ; ஸமுத்திரம் கலங்கிற்று. அக்ஷகுமாரன் மகா வீரன் ; தங்கக் கட்டுகளுடன் இறகுகளால் அலங்கரிக்கப்பட்டுக் கூர்மையான மூன்று பாணங்களைக் கடும் விஷமுள்ள மகாஸர்ப்பங்களைப்போல் ஹனுமானுடைய தலையில் பிரயோகித்தான். உடனே ரத்தப்பிரவாஹத்தால் அந்த வானர வீரனுடைய தேகம் நனைந்தது. அவர் கண்களைக் கோபத்தால் உருட்டி, விழித்துப், பால சூரியனைப்போல் சிவந்து, பாணங்களாகிற கிரணங்களால் சூழப்பட்டு விளங்கினர். ராவணேசுவரனுடைய புத்திரன், பயங்கரமான ஆயுதங்களையும், வில்லையும் தரித்து தன்னுடன் யுத்தத்திற்கு வந்து நிற்பதைக் கண்டு ஸந்தோஷத்தாலும் யுத்த ஆவேசத்தாலும் பூரித்தார். உத்தராயணத்தில் மத்தியான்ன காலத்தில் மந்தரபர்வதத்தின் உச்சியிலிருந்து லோகத்தைக் கொளுத்தும் சூரியனைப்போல், ஹனுமான் கோபத்தாலும் பலத்தாலும் வீர்யத்தாலும் நிறைந்து, நேத்திரங்களிலிருந்து பறக்கும் நெருப்புப் பொறிகளால் அக்ஷகுமாரனையும் அவனுடைய வாகனங்களையும் ஸைன்யத்தையும் எரித்தார். பிறகு அக்ஷகுமாரனென்ற காளமேகம் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட வில்லாகிற இந்திர தனுஸால் பிரகாசித்துக்கொண்டு ஹனுமானென்ற பர்வதத்தில் பாணங்களான மழைத்தாரைகளைப் பெய்தது. மஹா மேகங்களுக்குச் சமமான பராக்கிரமத்தையுடைய மாருதி, அக்ஷகுமாரன் யுத்தத்தில் தீரனாய் நிமிஷத்திற்கு நிமிஷம் அவனுடைய வீர்யமும் தேஜஸும் விருத்தியடைவதைக் கண்டு, இன்று நல்ல யுத்தம் நடக்குமென்று ஸந்தோஷத்தால் கர்ஜித்தார். காட்டில் புல்லால் மூடப்பட்ட பெருங்கிணற்றில் மதயானை விழுவதுபோல், அக்ஷகுமாரன் பால்யத்தால் கர்வமடைந்து, யுத்தம் செய்வதில் தனக்கு நிகரில்லையென்ற கொழுப்புடன் வர வரக் கோபத்தால் கண்கள் ரத்தம்போல் சிவக்க, யுத்தத்தில் நிகரில்லாத ஆஞ்சநேயரை எதிர்த்தான். பாணவர்ஷத்தால் அவரை மறைக்க, மாருதி மேகம்போல் கர்ஜித்துப் புஜங்களையும் துடைகளையும் பயங்கரமாய்

தட்டிக்கொண்டு ஆகாசத்தில் கிளம்பினார். உடனே பிரதாப சாலியான அந்த ராக்ஷஸவீரன் ரதத்தைச் செலுத்தி, கார்மேகம் பர்வதத்தில் சிலைகளை வர்ஷிப்பதுபோல், அந்த வானர வீரன்மேல் பாணங்களைப் பிரயோகித்தான். மனோவேகமுள்ள மாருதி அதைக் கண்டு கோபம் மேலிட்டு அவைகளைத் தன்மேல் படாமல் உபாய மாய்த் தப்பித்துக்கொண்டு, அவைகளுக்கு நடுவில் காற்றைப்போல் ஸஞ்சரித்து ஆகாசமார்க்கத்தில் உலாவினார். அக்ஷகுமாரன் வில்லை வளைத்து யுத்தாவேசங்கொண்டு சிரேஷ்டமான பல பாணங்களால் ஆகாசத்தை மறைப்பதைக் கண்டு, அவனை மெச்சி, "இவ்வளவு சாதுர்யமாய் யுத்தம் செய்பவனை ஜயிக்கும் வழியென்ன?" என்று யோசித்தார். அப்பொழுது அந்த ராக்ஷஸன் மிகவும் தைர்யமாய் அவரைப் புஜங்களுக்கு நடுவில் பாணங்களால் பிளக்க, ஆஞ்சநேயர் பேரிடிபோல் கர்ஜித்து, யுத்த ரகசியத்தை நன்றாயறிந்தவரானவ யால், அந்தச் சிறுவனுடைய பராக்கிரமத்தைச் சற்று யோசித்து 'பால சூரியனைப்போல் பிரகாசிக்கும் இந்த ராக்ஷஸன் மஹா பலவானாய்த் தோன்றுகிறான்; வயதில் சிறுவனாயிருந்தாலும் யுத்தத்தில் கைதேர்ந்தவர்கள் செய்ய முடியாத ஆச்சரியங்களைச் செய்கிறான். ஸகல யுத்த தந்திரங்களையும் நன்றாய் அறிந்து பிரயோ- கிக்கிறான். இவனைக் கொல்ல எனக்கு மனமில்லை. இவன் மஹா தைரியசாலி; பராக்கிரமத்தில் சிறந்தவன்; நேர்த்தியாய் யுத்தம் செய்கிறவன்; மிகுந்த பொறுமையுள்ளவன். தேவகணங்களும் மஹரிஷிகளும் யுத்த வியாபாரங்களில் இவனுடைய சௌரியத்தைக் கண்டு ஸந்தேகமில்லாமல் மெச்சுவார்கள். இவனுடைய பராக்கிரமமும் உத்ஸாஹமும் வர வர விருத்தியா கின்றன. கொஞ்சங்கூடப் பயமில்லாமல் எனக்கெதிரே வந்து நின்று யுத்தத்திற்கு அழைக்கிறான். கூசாமல் என்னைப் பார்க்கிறான். மனோவேகமுடைய இந்தச் சிறுவன் பராக்கிரமத்தால் தேவாசுரர்களின் ஹிருதயத்தையும் நடுங்கச் செய்வான். க்ஷணத் திற்கு க்ஷணம் இவனுக்கு யுத்தத்தில் வீரியம் விருத்தி அடைகிறது. இவனை நான் அலக்ஷியஞ்செய்தால் எப்படி ஜயிக்க முடியும்? ஆகையால் இவனைக் கொல்ல வேண்டியது அவசியம். வர வரப் பற்றி எரியும் நெருப்பை அலக்ஷ்யம் செய்ய லாமா?" என்று சத்துருவின் பராக்கிரமத்தை இவ்விதமாய் ஊஹித் துத் தான் செய்யவேண்டிய காரியத்தையும் நிச்சயித்து அவனைக் கொல்வதில் புத்தியைச் செலுத்தினார். அவனுடைய ரதத்தி

எட்டுக் குதிரைகள் கட்டியிருந்தன. அவை பலத்தால் கொழுத்து வாயுவேகமுள்ளவைகளாய்ப் பலவித நடைகளிலும் பழகி, ரதத்தை அலக்ஷியமாய் இழுக்கக் கூடியவை.

முதலில் இவனை ரதமில்லாமல் செய்ய வேண்டுமென்று ஆஞ்ஜநேயர் ஆகாசமார்க்கத்திலிருந்துகொண்டே கைகளால் அவைகளை அறைந்து கொன்றார். உடனே அந்தத்திவ்விய ரதம் ஏர்க்கால் முறிந்து, கொடிகள் அறுந்து, குதிரைகள் மடிந்து, பூமியில் விழுந்தது. அப்பொழுது மஹாரதனான அக்ஷகுமாரன் அந்தத் தேரை விட்டு வில்லையும் கத்தியையும் எடுத்துக்கொண்டு ஆகாசத்தில் பாய்ந்து, யோகாப்பியாஸத்தால் ஸ்தூலதேகத்தை விட்டுத் திவ்ய தேஹத்துடன் ஸ்வர்க்கத்திற்குப் போகும் முனியைப்போல் விளங்கினான். வாயுவின் பராக்கிரமத்தையுடைய வாயுபுத்திரன் தன் தகப்பனும் கருடனும் ஸஞ்சரிக்கும் ஆகாச வீதியில் பயமில்லாமல் எதிர்த்துவரும் அந்த ராக்ஷஸவீரனை ஸமயம் பார்த்து நெருங்கி, அவனுடைய கால்களை இறுகப் பிடித்து, கருடன் ஸர்ப்பத்தைச் சுழற்றுவதுபோல் சுழற்றி அவனை அடித்து நொறுக்கித் தேய்த்தும் பிண்டமாக்கிப் பூமியில் வீசியெறிந்தார். புஜங்கள் துடைகள் இடுப்புகள் தளர்ந்து ரத்தம் பெருக அக்ஷகுமாரன் பூமியில் விழுந்து உயிரைவிட்டான்.

இப்படி ஹனுமான் அவனை அடித்து முறித்துத் தேய்த்து ராவணனுடைய இருதயத்தைக் கலக்கினார். மஹரிஷிகளும் கிரஹ தேவதைகளும் மஹா விரதங்களை அனுஷ்டித்தவர்களும், பூதங்களும், யக்ஷகர்களும், பன்னகர்களும், தேவர்களும், இந்திரனும் ஆச்சரியம் மேலிட்டு ஆஞ்ஜநேயரை கண்கொட்டாமல் பார்த்தார்கள். ரக்தத்தைப்போல் சிவந்த நேத்திரங்களையுடையவனும் இந்திர புத்திரனான ஜயந்தனைப்போல் தேஜஸ்வியுமான அக்ஷ குமாரனை இவ்விதமாய்க் கொன்று ஹனுமான் உத்ஸாஹம் மேலிட்டு மறுபடியும் அந்த வாசற்படியின்மேல் பிரளயகால ம்ருத்யுவைப்போல் நின்றார்.

நிஹத்ய தம் வஜ்ரி ஸுதோபமப்ரபம்
குமாரமக்ஷம் க்ஷதஜோபமேக்ஷணம் ।
தமேவ வீரோபிஜகாம தோரணம்
க்ருதக்ஷண: கால இவ ப்ரஜாக்ஷயே ॥ (39)

ராகு தசை

# புத புக்தி

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

## யுத்த காண்டம் — 120-வது ஸர்க்கம்

## தேவர்கள் ராமனை ஸ்தோத்திரம் செய்தது

ததோ ஹி துர்மனா ராம : ச்ருத்வைவம் வததாம் கிர :
தத்யௌ முஹூர்த்தம் தர்மாத்மா பாஷ்பவ்யாகுல லோசன: (1)

இப்படி ஸகல ஜனங்களும் சொல்வதைக் கேட்டு ராகவன் சற்று நேரம் துக்கம் மேலிட்டு, "ஐயோ ! என்ன காரியம் செய்து விட்டேன்" என்று கவலை கொண்டார். கேவலம் தரும ஸ்வரூபியாகையால் லோகத்தில் தருமத்தை தான் அனுஷ்டித்து மற்றவர்களும் அனுஷ்டிக்கும்படிச் செய்ய வேண்டியவர் ; ஆகையால் ஸீதையை ஒப்புக் கொள்ள இஷ்டப்படவில்லை. ஆனால், அபார கருணாமூர்த்தி ; யாதொரு காரணமில்லாமல் தனக்கு அதிக பிரியமான ஒரு ஸ்திரீயை இப்படி வருத்தப்படுத்த வேண்டியிருக்கிறதே யென்று, அவள் பட்ட கஷ்டங்களையும் தன் வார்த்தைகளால் அவளுடைய இருதயம் பிளப்பதையும் கண்டு, கண்களில் நீர் முத்து முத்தாய்த் தளும்பிற்று.

பிறகு, குபேரன், யமன், மஹேந்திரன், வருணன், மஹாதேவன் லோககர்த்தாவான பிரம்மா முதலியவர்கள் சூரியப் பிரகாசமுள்ள விமானங்களில் லங்கைக்கு வந்து ராமனிருக்குமிடத்திற்குச் சென்றார்கள். அவர்கள் திவ்வியமான ஆபரணங்களால் பிரகாசிக்கும் கைகளை உயரத் தூக்கிக்கொண்டு, அதிக வினயத்துடன் கைகூப்பி நிற்கும் ராகவனை நோக்கி,

"ஸ்வாமி! தாங்கள் ஸகல லோகங்களுக்கும் இந்த பிரம்மாவின் மூலமாய் கர்த்தா; கேவலம் ஞானஸ்வரூபி; எல்லாமறிந்தவர்; ஒன்றுமறியாத ஸாதாரண மனுஷ்யனைப்போல் ஸீதையை அலக்ஷியம் செய்யலாமா? அவளை அக்னியில் விழும்படி விடலாமா? பிரம்மாதி தேவ கணங்களுக்குச் சிரேஷ்டமான தாங்கள் தங்களுடைய நிஜஸ்வரூபத்தை ஏன் அறிந்து கொள்ளவில்லை? தாங்கள் பூர்வ கல்பத்தில் வஸுக்களில் ஸகல பிரஜைகளுக்கும் அதிபதியான ரிததாமா வென்பவர்; மூன்று லோகங்களுக்கும் தாங்கள் ஆதி கர்த்தா; எல்லோருக்கும் மேலானவர்; ருத்திரர்களில் எட்டாவது ருத்திரர்; ஸாத்யர்களில் ஐந்தாவது ஸாத்யர்; அச்வினீ தேவதைகள் தங்களுடைய காதுகள்; சூரிய சந்திரர்கள் தங்களுடைய நேத்திரங்கள், லோகங்களுடைய ஆதியிலும், பிரளயத்திலும் தாங்கள் ஒருவரே காணப்படுகிறீர்கள். இப்படி ஸர்வக்ஞனும், ஸர்வசக்திமானும், ஸர்வேச்வரனுமிருந்தும், பிரம்மவித்தான ஜனகருடைய குலத்தில், ஸ்த்ரீ புருஷ ஸம்பந்தமில்லாமல் பிறந்த ஸீதையை அலக்ஷியம் செய்கிறீர்கள்."

ஸகல லோகங்களுக்கும் நாதனும், தர்மத்தை அனுஷ்டிக்கச் செய்கிறவருமான ரகுவீரன், லோக பாலர்கள் தன்னை ஸ்தோத்திரம் செய்வதைக் கேட்டு, சொன்னார்: "தேவதைகளே! நான் தசரத சக்ரவர்த்திக்குப் பிறந்தவன்; என் பெயர் ராமன்; நான் கேவலம் மனுஷ்யன்; நான் யார்? யாரைச் சேர்ந்தவன்? எதற்காக இங்கு வந்தவன்? நீங்களே எனக்குத் தெரியப்படுத்துங்கள்" என்றார்.

பிரம்மஸ்வரூபத்தை அறிந்தவர்களுக்குள் சிரேஷ்டரான பிரம்மா அதைக் கேட்டு, "ஸ்வாமி! ராம! வீணாகாத பராக்கிரமத்தையுடையவரே! நான் ஸத்தியமாய்ச் சொல்வதைக் கேளுங்கள். நாரம் என்ற பிரகிருதியிலும் ஜீவன்களிலும் இருப்பிடத்தை அடைந்து, அந்தர்யாமியாய் விளங்குவதால் நாராயணனென்று தங்களுக்குப் பெயர். லீலையாய் பிரபஞ்சத்தைப் படைத்துக் காத்தழிக்கிறவர்; எப்பொழுதும் லக்ஷ்மிஸமேதராய் விளங்குகிறவர்; சக்கிரத்தை ஆயுதமாயுடையவர்; ஸர்வவியாபி; ஒற்றைக் கொம்புடைய ஆதி வராஹமூர்த்தி. பூர்வத்தில் மதுகைடபர் முதலிய சத்துருக்களையும், இனிவரும் சிசுபாலன் தந்தவக்கிரன் முதலிய அஸுரர்களையும் ஜயித்தவர்; தாங்கள் அக்ஷரஸ்வரூபி; பிரம்மம்; இருத்தல் உண்டாதல் மாறுதல்

வளர்தல் குறைதல் நாசமென்ற அறுவகை விகாரங்களுக்கு உட்படாதவராகையால் ஸத்தியம்; ஸகல பிரபஞ்சங்களுக்கும் ஆதியிலும், நடுவிலும் முடிவிலும் காணப்படுகிறவராகையால் நித்தியர்; ஸகல லோகங்களுக்கும் பரம மங்களத்தைக் கொடுக்கக் கூடிய தர்ம ஸ்வரூபி; ஸகல திக்குகளிலும் ஸேனைகளையுடையவர்; ஸகலத்திற்கும் ஈச்வரனாகையால் விஷ்வக்ஸேனர். நான்கு புருஷார்த்தங்களையும் ஒரே காலத்தில் கொடுக்கக் கூடியவரென்பதற்கு அடையாளமாய் எப்பொழுதும் நான்கு திருக்கைகளுடன் விளங்குகிறவர்; கால ரூபமான சார்ங்கமென்ற தனுஸைக் கையில் பிடித்துப் பக்தர்களை ரக்ஷிப்பதற்கு எப்பொழுதும் ஸித்தமாயிருப்பவர். ஸகல இந்திரியங்களையும் மயக்கும்படியான திவ்யமங்கள விக்ரஹத்தை யுடையவர்; இருதய குகையில் சயனம் செய்பவராகையால் புருஷன், புருஷோத்தமன்; தன்னை ஆச்ரயித்தவர்களை ரக்ஷிப்பதில் ஒருவராலும் தடுக்கப்படாதவர்; வித்யாரூபமான நந்தகமென்ற கத்தியைத் தரித்தவர். ஸர்வவியாபியானதால் விஷ்ணு; தங்களுடைய கிருபைக்குப் பாத்திரமானவனை அப்பொழுதே அவ்விடத்திலேயே ரக்ஷிக்கிறீர்கள். கிருஷ் என்ற பதத்திற்குப் 'பூமி' யென்று அர்த்தம். ண என்ற எழுத்திற்கு 'ஸுகம்' என்று அர்த்தம். 'ஸகல பிரபஞ்சத்திற்கும் பரம ஸுகத்தை விளைவிக்கிறவ'னென்ற திருநாமத்தை வகித்தது ஸாக்ஷாத் பரப்பிரம்மமே. ஸகலத்தையும் தாங்கும் சக்தியுடையவர்; தேவ ஸைன்யங்களை நடத்துகிறவர்; ஸகலப் பிராணிகளுக்கும் அவரவர்களுடைய கர்ம பலன்களைக் கொடுக்கிறவர். தேவதைகள் ஜீவகோடிகளை ரக்ஷிக்கிறார்களென்றால் இடையனைப் போல் கையில் கழியை எடுத்துக்கொண்டு மேய்க்கிறார்களென்று கருத்தல்ல. எவர்களை ரக்ஷிக்க விரும்புகிறார்களோ அவர்களுக்கு உத்தம புத்தியைக் கொடுக்கிறார்களென்ற வசனப்படி, பிராணிகளுடைய புத்தி பொறுமை இந்திரிய நிக்கிரஹம் முதலிய குணங்களை நடப்பிக்கிறவர். இந்தப் பிரபஞ்சத்திற்கு உற்பத்தி ஸ்தானமும் லயமடையும் ஸ்தானமும் தாங்களே. இந்திரனுக்குத் தம்பியாய் அவதரித்தவர். வேதத்தை அபகரித்த மதுவென்ற அசுரனை ஸம்ஹரித்தவர். அளவற்ற ஐச்வரியத்தையுடையவர். ஈச்வரர்களுக்கும் ஈச்வரன். பிரபஞ்சத்திற்குக் காரணமான தாமரை மலர் தங்களுடைய நாபியிலிருந்து உண்டாகிறது. யுத்தத்தில் சத்துருக்களை நாசம் செய்கிறவர். எல்லோரும் சரண

மடையத் தகுந்த ஞானம், சக்தி, தயை முதலிய உத்தம குணங்களையுடையவரென்றும் ரக்ஷிப்பதற்குச் சிரேஷ்டமான உபாயமென்றும் தங்களை ஸ்தோத்திரம் செய்கிறார்கள். ஆயிரம் சாகைகளுள்ள ஸாமவேத ஸ்வரூபி. நித்திய நைமித்திக காம்ய மென்ற ஸாமான்ய விசேஷ கர்மங்களைச் செய்யும்படி அநேக விதமாய் ஏவுகிறவர். ஸகல கர்மங்களுக்கும் ஸாக்ஷி. மூன்று லோகங்களுக்கும் ஸிருஷ்டிகர்த்தா; எனக்கும் மற்ற தேவர்களுக்கும் தாங்களே கர்த்தா; பிறருக்கு உட்படாதவர்; முக்தர்களுக்கும் நித்ய சூரிகளுக்கும் தங்களுக்கு ஸமமான ஆனந்தத்தை அனுக்கிரகிப்பவர். அவர்களை ரக்ஷிப்பதற்காக அவர்களுக்கு முன்னும் ஸிருஷ்டிக்கு முன்னும் விளங்குகிறவர். தாங்களே யக்ஞம், வஷட்காரம், ஓங்காரம்; 'விஷ்ணுவே யக்ஞஸ்வரூபி' என்ற ச்ருதிப்படி, யக்ஞத்தில் முக்கியமான யஜமானன். ரித்விக்குகள், பசு, ஹவிஸ், ஆஜ்யம், ஸ்ருக், ஸ்ருவம் முதலியவைகளின் ஸ்வரூபமாயும் யக்ஞத்தில் ஆராதிக்கப்படும் இந்திராதி தேவதைகளின் சரீரமாயுமிருக்கிறவர்;

"சிரேஷ்டமான தவத்தால் ஆராதிக்கத் தகுந்தவர்; தங்களுடைய உற்பத்தியையாவது லயத்தையாவது தாங்கள் இன்னாரென்றாவது, வேதங்களுக்கும் அதை அனுஷ்டிப்பவர்களுக்கும் தெரியாது. விசேஷமாய் பிராம்மணர்களிலும் பசுக்களிலும், ஸாமான்யமாய் ஸகல பூதங்களிலும் திக்குகளிலும் ஆகாசத்திலும், பர்வதங்களிலும் வனங்களிலும் காணப்படுகிறீர்; அனந்தமான தலைகளையும் நேத்திரங்களையும் சரணங்களையுமுடையவர்; ஹ்ரீ லக்ஷ்மீ யென்ற பத்தினிகளுடன் விளங்குகிறவர்; மஹாபர்வதங்களுடன் பூமியையும் இதர மஹா பூதங்களையும் தரிக்கிறீர்கள். பிரம்மதினத்தின் முடிவில் இந்தப் பூமி அழிந்த பிறகு, மூன்று லோகங்களையும் அவைகளிலுள்ள ஸகல பூதங்களையும் தங்களுக்குள் அடக்கிக் கொண்டு, க்ஷீர ஸாகரத்தில் சேஷ சயனத்தில் யோக நித்திரை செய்வதை மார்க்கண்டேயர் முதலிய மஹரிஷிகள் கண்டனுபவித்திருக்கிறார்கள். "இதர தேவதைகள் அவருக்கு அங்கங்கள்" என்ற சுருதிப்படி நான் தங்களுடைய ஹிருதயம்; ஸரஸ்வதி தங்களுடைய நாக்கு. பரப்பிரம்மத்தின் அங்கங்களில் மயிர்களைப்போல் தேவர்கள் ஸம்பந்தப்பட்டிருக்கிறார்கள். தாங்கள் நேத்திரத்தை மூடுவது ராத்திரி; திறப்பது பகல்; தங்களுடைய சுவாஸமே வேதங்கள்; தாங்கள் அந்தர்யாமியாயிராத வஸ்து

யாதொன்றுமில்லை. ஸகல ஜகத்தும் தங்களுடைய ஆக்ஞையா நிலைபெற்று ஸகல வ்யவஹாரங்களையும் நடத்துகிறது; அந் சரீரத்தின் விசேஷங்களும் தங்களுடைய விசேஷணங்களே. தங் ளுடைய உறுதியென்ற குணமே பூமி; தங்களுடைய கோபமே அக்னி; கிருபையே சந்திரன்; ஸ்ரீவத்ஸமென்று விளங்கு மறுவும் அதே. பூர்வத்தில் பலியென்ற மஹாஸுரனைக் கட்டி மஹேந்திரனை மூன்று லோகங்களுக்கும் அரசனாகச் செய்தீர்கள்; அப்பொழுது மூன்று லோகங்களையும் மூன்றடிகளால் அளந்தீர்கள் மஹாலக்ஷ்மியே ஸீதையாய் அவதாரம் செய்திருக்கிறாள்; தாங்கள் மஹாவிஷ்ணு; ஸகல பிராணிகளுக்கும் நாதனாகையாலும், அவை களுக்கு நித்தியமான க்ஷேமத்தைக் கொடுக்க வேண்டியவரானை யாலும், லோக கண்டகனான ராவணனை ஸம்ஹரிக்க மனுஷ்ய சரீரத்துடன் அவதரித்திருக்கிறீர்கள். அதர்மத்தை நாசம் செய்து தர்மத்தை நிலைநிறுத்துவதே ஸ்வபாவமாயும் ஸ்வரூபமாயுமுள்ள தாங்கள், எங்களுடைய பிரார்த்தனையை அங்கீகரித்து, ராவணன் முதலிய ராக்ஷஸர்களை நாசம் செய்தீர்கள். அவதாரத்தின் பிரயோஜனம் முடிந்தபடியால் ஸந்தோஷத்துடன் தங்களடிச் சோதிக்கு எழுந்தருள வேண்டும். ஸ்வாமி! தங்களுடைய பலமும் வீரியமும் பராக்கிரமும் தடையற்றவை, வீணாகாதவை; தங்க ளுடைய தரிசனம் வீண் போகாது; தங்களை ஸ்தோத்திரம் செய்வதும் வீண் போகாது; தங்களிடத்தில் அத்யந்தம் பக்தி செய்கிறவர்கள் அதி சீக்கிரத்தில் அபேக்ஷித்த பலன்களை அடை கிறார்கள். நித்தியனும் தேவாதி தேவனும் புராண புருஷனும் புருஷோத்தமனுமான தங்களிடத்தில் மனோவாக்குக் காயங்களால் இடைவிடாமல் பக்தி செய்பவர்கள் இந்த லோகத்தில் தேக மிருக்கும் வரையில் ஸகல போகங்களையும் அனுபவித்து, பரலோகத் தில் ஸமஸ்த மனோரதங்களையும் அடைகிறார்கள். ஸகல விதமான தவம் முதலியவைகளைக் காட்டிலும் தங்களுடைய பக்தியே சிரேஷ்டமான தர்மம்; இப்படிப் பக்தி செய்யத் திறமையில்லாத வர்கள் மேற் சொன்ன ஸ்தோத்திரத்தைப் பக்தியுடன் உச்ச ரித்தால் அவர்களுக்குப் புனர் ஜென்மமில்லை. இந்த ஸ்தோத்திரம் வேதத்தில் ஏற்பட்டது; நித்யமானது; அனாதியாயுள்ளது; ஆகை யால் அளவற்ற மஹிமையை யுடையது" என்றார்.

இமமார்ஷம் ஸ்தவம் நித்ய மிதிஹாஸம் புராதனம்
யே நரா: கீர்த்தயிஷ்யந்தி நாஸ்தி தேஷாம் பராபவ: (36)

# கேது புக்தி

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

## பால காண்டம் — 76-வது ஸர்க்கம்

## பரசுராம கர்வபங்கம்

தச்ச்ருத்வா ஜாமதக்ன்யஸ்ய வாக்யம் தாசரதிஸ்ததா
கௌரவாத் யந்த்ரிதகத: பிதூ ராம மதாப்ரவீத் (1)

**ரா**மன் தன் பிதாவிற் கெதிரில் உரக்கப் பேசக் கூடாதென்ற மரியாதையை அனுசரித்துப் பரசுராமரைப் பார்த்து மெதுவாய், "பிருகு குலதிலக ! தங்களுடைய வீரச்செயல்களைக் கேள்விப் பட்டிருக்கிறேன். தகப்பனைக் கொன்றவர்களைக் கொன்று பழி தீர்க்க வேண்டியது சூரனான புத்திரனுடைய கடமை; அதை ஒப்புக் கொண்டேன். இது வரையில் தங்களை எதிர்த்த க்ஷத்திரியர் களைப் போல் பராக்கிரமமற்ற அசக்தனென்று என்னையும் எண்ணி அவமதிக்கிறீர்கள். பிறர் செய்யும் அவமானத்தைப் பொறுக்க மாட்டேன். பிறரை அடக்கும் சக்தி எனக்குண்டு. அதை இப்பொழுது பார்ப்பீர்கள்" என்று அக்கோபத்துடன் பரசுராம ருடைய கையிலிருந்து வில்லையும் பாணத்தையும் வெகு லாகவமாக வாங்கி, வில்லை வளைத்து நாணேற்றிப் பாணத்தைப் பூட்டி, தாங்கள் சொன்னபடி செய்தேன். தாங்கள் பிருகு வம்சத்தில் பிறந்த பிராம்மண சிரேஷ்டர் ; என் குருவான விச்வாமித்திரருடைய ஸகோதரி தங்களுடைய பிதாவைப் பெற்றவள். ஆகையால் தங்களுடைய உயிரை வாங்கும் இந்தப் பாணத்தை பிரயோகிக்க முடியாமலிருக்கிறேன். இந்தப் பாணமோ விஷ்ணுவைச் சேர்ந்தது. சத்துருவை ஜயிக்காமல் திரும்பாது, பலத்தையும் கர்வத்தையும் அழிக்கும், வீண் போகாது. தங்களுடைய தபோ பலத்தால்

ஸம்பாதித்த உத்தம லோகங்களை அடையாமல் செய்யட்டுமா? அந்தத் தபஸின் பயனை இதற்குப் பலி கொடுக்கிறீர்களா ? அல்லது நினைத்த லோகங்களுக்குப் போகும் தங்களுடைய சக்தியை அழிக் கட்டுமா ?'' என்றார்.

தன் பூர்வாவதாரமான பரசுராமரிடத்திலிருந்து தன் வில்லையும் பாணத்தையும் வாங்குவதாய் வெளிக்குக் காட்டி, ராமன் அவரிடத்தில் முன்பு வைத்த சக்தியைத் தானே மறுபடியும் தன்னிடத்தில் வருவித்துக் கொண்டார். அந்த ஆச்சர்யத்தைப் பார்க்க பிரம்மாதி தேவர்களும் மஹரிஷி கந்தர்வ அப்ஸரஸ் ஸித்த சாரண கின்னர யக்ஷ நாக ராக்ஷஸ கணங்களும் கூட்டம் கூட்டமாய் வந்தார்கள். ஸகல பிராணிகளும் அசைவற்று நின்றன. பரசுராமரிடத்திலிருந்த விஷ்ணு தேஜஸ் அவரை விட்டு விலகிற்று. ஒன்றுந் தோன்றாமல் இதென்ன ஆச்சரியமென்று அவர் ராமனை உற்றுப் பார்த்தார். தன் சக்தி குறைவதற்கு அவருடைய தேஜஸே காரணமென்று உணர்ந்து, மலர்ந்த செந்தாமரை இதழ்களைப் போன்ற நேத்திரங்களையுடைய ராமனை மஹாவிஷ்ணு வென் றறிந்து மெதுவாய், "காச்யபருக்கு இந்தப் பூமியை நான் தானம் செய்தபொழுது அவர் என் ராஜ்யத்தில் வஸிக்கக் கூடாது" என்றார். அவருடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு இந்தப் பூமியில் ஒரு ராத்திரிகூடத் தங்குவதில்லை என்று பிரதிக்ஞை செய்தேன். ஆகையால், நான் நினைத்தவிடங்களுக்குப் போகும் சக்தியை அழிக்க வேண்டாம். மனோ வேகமாய் மகேந்திர பர்வதத்திற்குப் போய் விடுகிறேன். என் தவத்தால் ஸம்பாதித்த உத்தம லோகங்களை நான் அடையாமல் செய். தாமஸம் வேண்டாம். நீ தேவாதிதேவனென்றும் அழிவற்றவனென்றும் மதுகைடபர்களை ஸம்ஹரித்த மஹாவிஷ்ணுவென்றும் அறிந்தேன். இந்த வில்லை வேறொருவர் எடுத்து வளைக்க முடியுமோ ? உனக்குப் பரம மங்கள முண்டாகட்டும். இதோ பார். தேவகணங்களும் பராபர வஸ்து வான உன்னை ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். லோக நாதனான உன்னால் ஜயிக்கப்படுவதில் எனக்குக் கொஞ்ச மேனும் அவமானமில்லை. நீ பாணத்தை பிரயோகித்தவுடன் மஹேந்திர பர்வதத்திற்குப் போகிறேன்'', என்றார். ராமன் அப்படியே செய்ய, உத்தம லோகங்களையடைய அனுஷ்டித்த பரசு ராமருடைய புண்ணிய பலம் அழிந்தது. அதைக்கண்டு அந்த

ஜமதக்னியின் குமாரர் அதி வேகமாய் மகேந்திர பர்வதத்திற்குப் போய் விட்டார்.

உடனே திக்குகள் இருள் நீங்கி பிரகாசித்தன. பிரம்மாதி தேவகணங்களும் ரிஷிகளும் கோதண்டபாணியான ராமனைக் கொண்டாடினார்கள். இப்படிப் பரசுராமன் தசரத ராமனைப் புகழ்ந்து பிரதக்ஷிணம் செய்து தன்னிடத்திற்குச் சென்றார்.

ராமம் தாசரதிம் ராமோ ஜாமதக்ன்ய : ப்ரசஸ்ய ச<br>
தத : ப்ரதக்ஷிணம் க்ருத்வா ஜகாமாத்மகதிம் ப்ரபு : (26)



# சுக்கிர புக்தி

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

## ஸுந்தர காண்டம் — 65-வது ஸர்க்கம்

## ஸீதா விருத்தாந்தம்

தத : ப்ரஸ்ரவணம் சைலம் தே கத்வா சித்ரகானனம்
ப்ரணம்ய சிரஸா ராமம் லக்ஷ்மணம் ச மஹாபலம் (1)

பிறகு அந்த வானரர்கள் பிரஸ்ரவணகிரிக்கு வந்து, அங்கதனை முன்னிட்டுக்கொண்டு ராம லக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் நமஸ்கரித்து, ஸீதையின் விருத்தாந்தத்தைச் சொல்ல ஆரம்பித்தார்கள். ஜானகி ராவணனுடைய அந்தப்புரத்தில் சிறைப்பட்டிருப்பதையும் ராக்ஷஸர்களால் மிரட்டப்படுவதையும், ராமனிடத்தில் மாறுத விசுவாசத்தை வைத்திருப்பதையும் ராவணன் கெடுவிட்டிருப்பதையும் ஸகல வானரர்களும் ராமனிடத்தில் சொல்ல ஆரம்பித்தார்கள். ஸீதை க்ஷேமமாயிருக்கிறாளென்று கேட்டு ராமன், "வானரர்களே! ஸீதை எங்கிருக்கிறாள்? என்னிடத்தில் எப்படி அபிப்பிராயப்படுகிறாள்? இதை விஸ்தாரமாய்ச் சொல்லுங்கள்" என்றார். அப்பொழுது ஸகல வானரர்களும் ஸீதையின் விருத்தாந்தத்தை நேரில் பார்த்தறிந்த ஆஞ்ஜநேயரை ராமனிடத்தில் விண்ணப்பம் செய்யும்படி தூண்டிவிட்டார்கள். அவர்கள் சொல்வதைக் கேட்டு ஹனுமான் ஸீதை இருக்கும் திசையைப் பார்த்து வெகு பக்தியுடன் நமஸ்கரித்து, ஸீதையின் விருத்தாந்தத்தை வெகு சாதுரியமாய்ச் சொல்ல ஆரம்பித்தார்.

"நான் இங்கிருந்து புறப்பட்டு நூறு யோஜனை விஸ்தீரணமுள்ள ஸமுத்திரத்தைத் தாண்டி, ஸீதையைத் தேடிக்கொண்டு

எப்படியாவது அவளைக் கண்டுபிடிக்கவேண்டுமென்ற நிச்சயத்துடன் போகையில், ஸமுத்திரத்திற்கு அக்கரையில் ராவணனென்ற துஷ்ட ராக்ஷஸனுடைய ராஜதானியான லங்கையில் பிரவேசித்து ஓரிடம் பாக்கியில்லாமல் தேடினேன். முடிவில் அவனுடைய அந்தப் புரத்தில் ஸீதை காவலில் வைக்கப்பட்டிருப்பதைக் கண்டேன். அங்கே அசோகவனத்தில் ராக்ஷஸிகளால் சூழப்பட்டு, அவர்களுடைய குரூர வார்த்தைகளையும் ஹிம்ஸையையும் பொறுத்துக் கொண்டு, தங்களிடத்தில் மாருத பிரீதி வைத்திருப்பதைக் கண்டேன். பரம பதிவிரதையாயும் துக்கத்தை அனுபவிக்கத் தகாதவளாயுமிருக்கும் தங்களுடைய பார்யை, ஒரே பின்னலுடன் துக்கசமுத்திரத்தில் முழுகிக் கரை காணுமல், வெறுந்தரையில் படுத்திருக்கிருள். ஹேமந்த ருதுவில் வாடியிருக்கும் தாமரை ஓடையைப்போல் நிறம் மாறி, ராவணன் எவ்வளவு பிரார்த்தித்தும் அவனிடத்தில் கொஞ்சங்கூட மனதைச் செலுத்தாமல், தங்களிடத்திலேயே நாடின சித்தத்தையுடையவளாய் இனி உயிரை வைத்துக்கொள்ளுகிறதில்லையென்று நிச்சயங்கொண்டிருக்கையில், நான் அவளைக் கண்டேன். இக்ஷ்வாகுவம்சத்தின் மஹிமையை நான் வர்ணிப்பதைக் கேட்டு அவளுக்கு என்னிடம் மெள்ள மெள்ள நம்பிக்கை பிறந்தது. பிறகு அவளுடன் ஸம்பாஷித்து நடந்த விருத்தாந்தம் யாவற்றையும் தெரிவித்தேன். தங்களுக்கும் மஹாராஜாவிற்கும் ஸ்நேஹம் ஏற்பட்டதைக் கேட்டு மிகவும் ஸந்தோஷித்தாள். அவளுடைய ஆசாரம் சிரேஷ்டமாயிருக்கிறது ; தங்களிடத்தில் பக்தியும் எல்லையற்றதா யிருக்கிறது; மஹா சக்தியுள்ளவள் ; உக்கிரமான தபஸையுடையவள். தங்களிடத்தில் வைத்த பக்தியை எப்படி வர்ணிப்பேன் ?

நிகரில்லாத புத்தியையுடைய மஹானுபாவ ! தாங்கள் சித்திரகூடத்தில் வஸிக்கையில் ஒரு காக்கையின் விஷயமாய் நடந்த விருத்தாந்தத்தைத் தங்களுக்கு அடையாளமாகச் சொல்லச் சொன்னுள். 'வாயுபுத்திரா ! இங்கே பார்த்த விஷயங்களெல்லாவற்றையும் விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டியது. மேலும், நான் தண்டகாரண்யத்தில் வஸிக்கையில் ஒருநாள் என் திலகம் அழிந்துபோகத் தாங்கள் மனச்சிலையால் என் நெற்றியில் திலகம் வைக்கவில்லையா ? இந்த விஷயத்தை நன்ருய் ஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டியது. நான் இப்பொழுது அனுப்பும் சூடாமணியை இதுவரையில் வெகு ஜாக்கிரதையாய் ரக்ஷித்து வந்தேன். நான் தங்களைப் பிரிந்து

துக்கப்படும்போதெல்லாம் தங்களைப் பார்ப்பதுபோல் இதைப் பார்த்து ஆறுதலடைந்தேன். இப்பொழுது அதையும் அனுப்பி விட்டேன். நான் இன்னும் ஒரு மாதம் மாத்திரம் பிழைத் திருப்பேன். ராக்ஷஸிகளால் ஒவ்வொரு நிமிஷமும் உபத்திரவிக்கப் பட்டு ஒரு மாதத்திற்கு மேல் பிழைத்திருக்கமாட்டேன்' என்று இந்த வார்த்தைகளை ஸுக்ரீவன் கேட்டுக்கொண்டிருக்கையில் ராமனிடத்தில் சொல்லிப் பிறகு சூடாமணியைக் கொடுவென்று என்னை ஆக்ஞாபித்தாள்.

ராவணனுடைய அந்தப்புரத்தில் ராக்ஷஸிகளுக்கு நடுவில் அகப் பட்டுக் காட்டில் புலிகளுக்கு நடுவில் அகப்பட்ட மானைப்போல் பயத்தால் மிரண்டு, தங்களைப் பிரிந்த துக்கத்தால் தேகமிளைத்து, இவ்வளவு கஷ்டத்திலும் பதிவிரதா தர்மத்தைக் கொஞ்சங்கூடக் கைவிடாமல் பூரணமாய் அனுஷ்டிக்கும் தங்களுடைய பார்யை சொல்லியனுப்பிய ஸமாசாரம் இதுதான். நடந்தபடி ஸகல விருத் தாந்தங்களையும் தெரிவித்தேன். எது எப்படியிருந்தாலும் ஸமுத்திரத்தைக் கடந்து லங்கைக்குப் போவதற்கு வேண்டிய ஸகல பிரயத்தனங்களையும் இப்பொழுதே செய்யவேண்டியது' என்று, ஆரம்ப முதல் முடிவு வரையில் ஸகல விஷயங்களையும் சாதுரியமாயும் உருக்கமாயும் வர்ணித்து, ராம லக்ஷ்மணர்கள் துக்கத்தை விட்டு ஆறுதலடைந்தார்களென்று அறிந்து ஸீதை அடையாளமாய்க் கொடுத்த சூடாமணியை ரகுநாதனிடத்தில் வணக்கமாய் ஸமர்பித்தார்.

தௌ ஜாதாச்வாஸௌ ராஜபுத்ரௌ விதித்வா
தச்சாபிக்ஞானம் ராகவாய ப்ரதாய |
தேவ்யா சாக்யாதம் ஸர்வமேவானு பூர்வ்யாத்
வாசா ஸம்பூர்ணம் வாயுபுத்ர : சசம்ஸ ‖ (27)

# சூரிய புக்தி

ஸ்ரீராமசந்த்ராய நம:

## பால காண்டம் — 70-வது ஸர்க்கம்

## இக்ஷ்வாகு வம்சம்

தத: ப்ரபாதே ஜனக: க்ருதகர்மா மஹர்ஷிபி:
உவாச வாக்யம் வாக்யக்ஞ: சதானந்தம் புரோஹிதம் (1)

மறுநாட் காலையில் ஜனகர் யாகக்கிரியைகளை முடித்து ஸபா மண்டபத்தில் வந்து மஹரிஷிகளுக்கு நடுவில் வீற்றிருந்து சதானந்தரைப் பார்த்து, "ஸ்வாமி! எனக்கு அதிதார்மிகனான ஒரு தம்பியுண்டு. அந்தக் குசத்வஜன் மஹாதேஜஸ்வி, கீர்த்திசாலி. ஜலத்தில் கோட்டைச் சுவர்போல் நாட்டப்பட்டிருக்கும் சூலங்களால் நிறைந்த இக்ஷுமதி நதியால் சூழப்பட்டு, புஷ்பக விமானம் போல் ஸகல ஜனங்களின் கோரிக்கைகளை நிறைவேற்றும் ஸாங்காச்யமென்ற நகரத்தில் ராஜ்யபாலனம் செய்துவருகிறான். என் யாகத்திற்கு வேண்டிய பதார்த்தங்களை அனுப்பிக்கொண்டு அதைக் காப்பாற்றுகிறானென்று தங்களுக்குத் தெரியுமே. என் புத்திரிகளின் விவாஹ மஹோத்ஸவத்தைப் பார்த்து அவனும் ஸந்தோஷிக்க வேண்டியதல்லவா? அவனைச் சீக்கிரமாய் அழைத்து வரும்படி உத்தரவு செய்ய வேண்டும்" என்றார். உடனே சதானந்தர் நிபுணர்களான தூதர்களை வேகமாய்ச் செல்லும் குதிரைகளின்மேல் அனுப்பினார். மஹேந்திரனுடைய ஆக்ஞையால் அவன் தம்பியான உபேந்திரனை அழைக்கப் போவதுபோல், அவர்கள் குசத்வஜருடைய நகரத்துக்குப் போய், ஜனகருடைய கட்டளையைத் தெரிவித்தார்கள். அவரும் உடனே புறப்பட்டு மிதிலைக்கு வந்து,

மஹாதார்மிகரான ஜனகரையும் சதானந்தரையும் நமஸ்கரித்து, அவர்களுடைய உத்திரவால் உத்தமமான சிம்மாஸனத்தில் உட்கார்ந்தார்.

பிறகு, அந்த சகோதரர்கள் ஸுதாமாவென்ற மந்திரியை அழைத்து, "சத்துருக்களால் ஜயிக்க முடியாதவரும் அளவற்ற தேஜஸுள்ளவருமான அயோத்யாதிபதியின் விடுதிக்குப் போய், அவரையும் அவருடைய குமாரர்களையும் மந்திரிகளையும் மஹர்ஷிகளையும் தகுந்த மரியாதையுடன் அழைத்துவர வேண்டும்" என்றார்கள். ஸுதாமா தசரதரிருக்குமிடத்திற்குப் போய் அவரை நமஸ்கரித்துக் கைகூப்பி, "அயோத்யாதிபதே! வீரச்சிரேஷ்ட! தங்களுடைய மஹரிஷி புரோஹித மந்திரி பந்து பரிவாரங்களுடன் தங்களைப் பார்க்கவேண்டுமென்று ஜனகமஹாராஜா விரும்புகிறார்" என்றார். அப்படியே தசரதரும் மஹரிஷிகளும் மந்திரி பரிவாரங்களும் பந்துக்களும் ஜனகருடைய ஸபாமண்டபத்திற்கு வந்து, அவரால் தகுந்தபடி உபசரிக்கப் பட்டார்கள். பிறகு காலதேசத்திற்கு உசிதமாய்ப் பேசுந்திறமையுள்ள தசரதர் ஜனகரைப் பார்த்து, "எங்களுடைய இக்ஷ்வாகு வம்சத்திற்கு வஸிஷ்ட பகவான் பரம குருவென்றும், ஸகல கார்யங்களிலும் முன்னிருந்து பேசுகிறவரென்றும் உமக்குத் தெரியுமல்லவா? விவாஹம் செய்து கொள்ளும் ஸ்த்ரீ புருஷர்களின் குலம் பத்துத் தலைமுறைவரையில் சுத்தமாயும் கீர்த்தி பெற்றதாயுமிருக்க வேண்டுமென்ற நியாயத்தால் இங்கிருக்கும் விசுவாமித்திரர் முதலிய மஹரிஷிகளின் அனுமதி பெற்று அவர் என் வம்ச பரம்பரையைக் கிரமமாக எடுத்துச் சொல்வார்" என்றார்.

பிறகு வஸிஷ்டர் ஜனகரையும் சதானந்தரையும் ஸபையிலுள்ளவர்களையும் பார்த்து, "மனோவாக்கிற்கெட்டாத ஸ்வரூபத்தையுடைய மஹாவிஷ்ணுவிடத்திலிருந்து பிரம்மா உண்டானார்; அவர் ஒவ்வொரு கல்பத்திலும் உண்டாவதால் பிரவாஹரூபமாய் நித்தியர்; இரண்டு பரார்த்தகாலம் ஆயுளுள்ளவர்; அவரிடத்திலிருந்து முறையே மரீசி, காச்யபர், விவஸ்வானென்ற சூரியன், வைவஸ்வதமனு, அயோத்தியாதிபதிகளுக்கு மூலபுருஷனான இக்ஷ்வாகு, குக்ஷி, விகுக்ஷி, மஹாதேஜஸ்வியும் பராக்கிரமசாலியுமான பாணன், அனரண்யன், ப்ருது, திரிசங்கு,

யுவனாச்வன் (துந்துமாரன்), மாந்தாதா, ஸுஸந்தி, த்ருவஸந்தி ப்ரஸேனஜித் தென்ற ஸஹோதரர்கள், த்ருவஸந்தியின் புத்ரனான பரதன், அஸிதன் உண்டானார்கள். அவருடைய காலத்தில் ஹேஹயர்கள், தால ஜங்கர்கள், சசிபிந்துக்களென்ற அரசர்கள் அவரை யுத்தத்தில் ஜயித்து ராஜ்யத்திலிருந்து துரத்தினார்கள். அவர் தன் இரு மனைவிகளோடும் மந்திரிகளோடும் ஹிமயமலைக்குப் போய், பிறகு மஹரிஷி தவம் செய்யும் புண்ணிய ஸ்தலத்தில் வஸித்தார். அவருடைய பத்தினிகளில் ஒருத்தி, மற்றொருத்தியின் கர்ப்பத்தை நாசம் செய்ய நினைத்து, அவளுக்கு விஷங்கலந்த அன்னத்தைக்கொடுத்தாள். அதைத் தெரியாமல் காளிந்தி யென்ற பார்யை தின்றாள்; அவள் தனக்கு உத்தமமான புத்திரன் பிறக்க வேண்டுமென்று, அங்கே தவம் செய்துகொண்டிருந்த பிருகு வம்சத்தில் பிறந்த ச்யவன மஹரிஷிக்குப் பணிவிடை செய்து வந்தாள். தேவர்களைப்போல் தேஜஸ்வியான அந்த முனிச் சிரேஷ்டர் அவளிடத்தில் ஸந்தோஷமடைந்து, "நீ தெரியாமல் புசித்த விஷத்தால் உன் கர்ப்பத்திலுள்ள சிசுவுக்கு யாதொரு கெடுதியும் நேராது. மஹா பாக்கியசாலியே! அது நிகரற்ற பல பராக்கிரமத்துடன் உன் வம்சத்தை விளங்கச் செய்யும்; கவலைப் படாதே" என்றார். சில காலத்திற்குப் பிறகு அஸிதன் இறந்தான். அந்தத் துக்கத்தால் காளிந்தி மனங்கலங்கி யிருக்கையில் மஹா கீர்த்திமானான ஒரு புத்திரனைப் பெற்றாள். கர்ப்பத்தில் அவனுக்கு விஷ ஸம்மந்தமிருந்தபடியால் ஸகரனென்று பெயர் வந்தது. அவனுக்குப் பிறகு அஸமஞ்சன், அம்சுமான், திலீபன், பகீரதன், ககுத்ஸ்தன், ரகு, பிரவிருத்தனென்றவர்கள் முறையே பிறந்தார்கள். இவன் ஒரு ஸமயத்தில், "நீ நரமாம்ஸத்தைத் தின்னும் ராக்ஷஸனாகக் கடவாய் என்று சபிக்கப்பட்டான். அதற்குப்பதிலாகச் சபிக்க ஜலத்தைக் கையிலெடுத்தபொழுது அது உசிதமல்லவென்று அவனுடைய பத்தினி தடுத்தாள். ஆகையால் அதைத் தன் கால் களில் விட்டவுடன் அவை நிறம் மாறின. ஆகையால் அவனுக்குக் கல்மாஷ பாதனென்று பெயருண்டாயிற்று. அவனுக்குப் பிறகு சங்கணன், ஸுதர்சனன், அக்கினிவர்ணன், சீக்ரகன், மரு, ப்ர சுச்ருகன், அம்பரீஷன், நகுஷன், யயாதி, நாபாகன், அஜன் முறையே பிறந்து அரசாண்டார்கள். அஜனுடைய புத்திரனே இதோ விருக்கும் தசரதர். இவருடைய புத்திரர்களே ராம லக்ஷ்மணர்கள்.

ஆதிமுதல் வீரர்களும் ஸத்யவாதிகளும் சுத்தர்களும் மஹா தர்மிஷ்டர்களுமான இக்ஷ்வாகு வம்சத்தரசர்களின் குலத்தில் பிறந்த ராம லக்ஷ்மணர்களுக்கு உமது பெண்ணை விவாஹம் செய்து கொடுக்கும்படி கேட்கிறோம். இவர்கள் எவ்விதத்திலும் ஒருவர்க்கொருவர் தகுந்த வரன்கள். ஆகையால் இதை நீர் அங்கீகரிக்க வேண்டும்" என்றார்.

ராமலக்ஷ்மணயோரர்த்தே த்வத்ஸுதே வரயே ந்ருப
ஸத்ருசாப்யாம் நரச்ரேஷ்ட ஸத்ருசே தாதுமர்ஹஸி (45)

# சந்திர புக்தி

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

## உத்தர காண்டம் — 31-வது ஸர்க்கம்

## ராவணன் அர்ஜுனனுடன் யுத்தத்திற்குப் போனது

ததோ ராமோ மஹாதேஜா விஸ்மயாத் புனரேவ'ஹி
உவாச ப்ரணதோ வாக்யமகஸ்த்யம் ரிஷிஸத்தமம் (1)

மஹாதேஜஸ்வியான ராமன், பகவானுடைய பிரஸாதத்தால் கிடைத்த ராக்ஷஸர்களின் மஹிமையைக் கேட்டு ஆச்சரியமடைந்து, அகஸ்திய மஹரிஷியைப் பார்த்து வணக்கமாய், "ஸ்வாமி! இந்த குரூர ராக்ஷஸன் பூமியில் ஸஞ்சரிக்கும்பொழுது ஜனங்களுக்குள் சௌகரியமென்பதே கிடையாதோ? ராஜாவாவது, அல்லது க்ஷத்திரியனில்லாவிட்டாலும் வேறு. பிரபுவாவது ராவணனை அடக்கக் கூடியவர் கிடையாதோ; இருந்தும் வீரியமற்றிருந்தார்களோ? வீரியமிருந்தும் ராவணனுடைய பலத்தாலும் திவ்யாஸ்திர சஸ்திரங்களாலும் ஜயிக்கப்பட்டார்களோ" என்று கேட்டார். ராவணன் அபஜயப்பட்ட விருத்தாந்தம் தனக்கு ஞாபகம் வந்தாலும் சுத்தவீரனான ராமனுக்கு இவ்வளவு கோபமும் ரோஷமும் உண்டானதாலும் அகஸ்திய மஹரிஷி புன்சிரிப்புக் கொண்டு, பிரம்மா க்ஷத்திரிய குணஸம்பன்னரான ருத்திரனைப் பார்த்துச் சொல்வதுபோல் :

"ராம! இப்படித் தசக்ரீவன் அரசர்களை உபத்திரவித்துக் கொண்டு பூமியெங்கும் ஸஞ்சரித்தான். ஒருக்கால் அமராவதியைப்போன்ற மாஹிஷ்மதி நகரத்திற்கு வந்தான். அங்கே அக்னி பகவான் எப்பொழுதும் வஸித்துக்கொண்டிருக்கிறார். அவ

ருடைய கிருபையால் அர்ஜுனனென்ற அரசனும் அவருக்கு ஸமானனுயிருந்தான். அவன் ஆண்டுவரும் காலத்தில் சத்துருக்களை நாசம் செய்வதற்காக ஆபிசார ஹோமகுண்டம் தர்ப்பைகளுக்குப் பதிலாக எப்பொழுதும் பாணங்களால் சூழப்பட்டிருந்தது. அதில் அக்னிபகவான் எப்பொழுதும் ஜ்வலித்துக்கொண்டிருந்தார். ராவணன் அங்கே போன தினத்தில் அர்ஜுனன் அந்தப்புர ஸ்திரீகளுடன் நர்மதாநதிக் கரையில் ஜலக்ரீடை செய்துகொண்டிருந்தான். ராவணன் அவனுடைய மந்திரிகளைப் பார்த்து, "ஹேஹய ராஜாவான அர்ஜுனன் எங்கே? லங்காதிபதியான ராவணன் அவனுடன் யுத்தம் செய்ய வந்திருக்கிறனென்று இப்பொழுதே தெரிவியுங்கள்'' என்றுன். அர்ஜுனன் நகரத்தில் இல்லையென்று அவர்களால் அறிந்து "தசக்ரீவன் விந்திய பர்வதத்திற்குச் சென்றுன். அது பூமியைப் பிளந்துகொண்டு ஆகாசத்தில் கிளம்பினதுபோலும் வெளுத்த மஹாமேகத்தைப்போலும் ஆகாசத்தை அளாவிக்கொண்டு, அநேக ஆயிரம் சிகரங்களோடும் ஸிம்ஹங்கள் வஸிக்கும் குகைகளோடும், மலைச் சிகரங்களிலிருந்து விழும் குளிர்ந்த ஜலதாரைகளால் உரக்கச் சிரிப்பதுபோலும், கந்தர்வ, கின்னர, அப்ஸரஸ் கணங்கள் ஆனந்தமாய் விளையாடுவதால் ஸ்வர்க்கம்போலும் விளங்கிற்று. ஸ்படிகத்தைப்போல் தெளிந்த ஜலத்தையுடைய ஆறுகள் உச்சியிலிருந்து விழும்பொழுது, ஆயிரம் நாக்குகளையும் படங்களையுமுடைய ஆதிசேஷனைப்போல் காணப்பட்டது. விசாலமான குகைகளுடன் ஹிமயமலையைப்போல் விளங்கும் விந்தியபர்வதத்தின் அழகையும் வளப்பத்தையும் பார்த்துக்கொண்டே லங்கேசுவரன் நர்மதா நதிக்கரைக்கு வந்தான். அதில் காக்கையின் இறகைப்போல் கறுத்துத் தெளிவான ஜலம் சிறிய கூழாங்கல்லுகளின்மேல் இனிமையாய்ச் சப்தித்துக்கொண்டு ஓடிற்று. காட்டெருமைகள், ஸிருமரங்கள், ஸிம்ஹங்கள், புலிகள், கரடிகள், மதயானைகள் முதலிய காட்டு மிருகங்கள் வெயிலால் தபித்துத் தாகமெடுத்து, அதில் அமிழ்ந்து நீரைக் கலக்கி விளையாடிக்கொண்டிருந்தன. சக்ரவாகம் நீர்காக்கை நீர்க்கோழி முதலிய பக்ஷிகள் மதங்கொண்டு மதுரமான சப்தங்களுடன் அங்கே ஸஞ்சரித்தன. நர்மதையென்ற நதியே ஓர் ஸ்திரீ; புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட விருக்ஷங்களே அவளுடைய ஆபரணங்கள்; சக்ரவாகபக்ஷிகளே ஸ்தனங்கள்; விஸ்தாரமான மணல் திட்டுகளே பின்தட்டுகள்; அன்னங்களின்

வரிசைகளே அரை நூல்மாலை ; புஷ்பங்களின் தாதுக்களே சந்தனப் பூச்சு; வெளுத்த நுரையே வெண்பட்டு உத்தரீயம் ; ஜலத்தில் ஸ்நானம் செய்யும் பொழுது உண்டாகும் சுகமான உணர்ச்சியே அவளைத் தொடுவதாலுண்டாகும் சுகம் ; மலர்ந்த செங்கழுநீர்ப் புஷ்பங்களே நேத்திரங்கள்.

ராவணன் புஷ்பக விமானத்திலிருந்து இறங்கி, தனக்கு இஷ்டமான ஸ்த்ரீயைத் தழுவுவதுபோல் நர்மதாநதியில் இறங்கி, அநேக முனிகணங்கள் ஸஞ்சரிக்கும் அதன் மணல்திட்டுகளில் தன் மந்திரி பிரதானிகளுடன் உட்கார்ந்து "இது ஸாக்ஷாத் கங்காநதியே" என்று நர்மதையை ஸ்தோத்திரம் செய்து, மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்தான். பிறகு, தன்னைச் சூழ்ந்திருந்த மந்திரிகளைப் பார்த்து, "சூரியன் ஆகாசவீதியின் நடுவில் ஸகல கிரணங்களுடன் விளங்குகிறார். லோகம் முழுவதும் அதனால் தங்கமயமாய்த் தோன்றுகின்றது. எங்கும் உஷ்ணமும் பிரகாசமும் வெகு கடுமையாய் சகிக்க முடியாமலிருக்கிறது. ஆனால், நாமிருக்கு மிடத்தைப் பாருங்கள். நான் இங்கே வந்திருக்கிறேனென்று தெரிந்து, இந்த சூரியன் தன் கிரணங்களை அடக்கிக்கொண்டு, சந்திரனைப்போல் குளிர்ச்சியாய் எனக்கு ஹிதமான உஷ்ணத்தையும், பிரகாசத்தையும் மாத்திரம் கொடுத்துக் கொண்டிருக்கிறான். அதிருக்கட்டும். காற்றைப் பிடித்துக் கரகத்தில் அடக்கமுடியுமோவென்று லோகத்தார் சொல்வதுண்டு. அப்படி ஒருவருக்கும் கட்டுப்படாத வாயு என்னிடத்தில் பயந்து நடப்பதைப் பாருங்கள். நர்மதாஜலத்தின் குளிர்ச்சியையும் அதிலுள்ள புஷபங்களின் பரிமளத்தையும் எடுத்துக் கொண்டு, வெகு ஜாக்கிரதையாய் நமது சிரமத்தைப் போக்குவதற்கு மிகவும் கஷ்டப்படுகிறான். பார்க்க மனோஹரமான இந்த நர்மதா நதியும் மீன்களாலும், முதலைகளாலும், பக்ஷிகளாலும், சிறு அலைகளாலும் விளங்கிக்கொண்டு, பயந்த ஸ்த்ரீயைப்போல் அடங்கியிருக்கிறது. நீங்களெல்லோரும் இந்திரனுக்கு ஸமமான அரசர்களுடன் யுத்தம் செய்து பல ஆயுதங்களால் தேஹமெங்கும் காயம் பட்டிருக்கிறீர்கள். சந்தனப்பூச்சுகளைப்போல் ரத்ததாரைகளால் அங்கங்கள் நனைந்திருக்கின்றன. மதங்கொண்ட திக்கஜங்கள் கங்கையில் இறங்கி விளையாடுவதைப்போல், இந்த சுகமான நதியில் ஸ்வேச்சையாய் ஸ்நானம் செய்யுங்கள். இந்தப் புண்ய நதி ஸகல பாபங்களையும் போக்கும். நானும் இங்கே ஸ்நானம்செய்து, சரத்

